இன்றுநீ ருவகை யெய்த யாவருங் காண வாதில்
வென்றுமீ னவனை வெண்ணீ றணிவிப்பன் விதியா லென்றார். (எ௩ச)

வே று.

மொழிந்தருள வதுகேட்டு முன்னிறைஞ்சி முகமலர்வார்
அழுந்துமிடர்க் கடலிடைநின் றடியோமை யெடுத்தருளச்
செழுந்தாளச் சிவிகையின்மேற் றென்னாடு செய்தவத்தால்
எழுந்தருளப் பேறுடையோ மென்பெறா மெனத்தொழலும். (எ௩ரு)

வே று.

ஆவது மழிவ தெல்லா மவர்செய லமண ராகும்
பாவகா ரிகளை நோக்கும் பழுதுட னீங்கி வெல்லச்
சேவுயர் கொடியி னார்தந் திருவுள்ள மறிவே னென்று
பூவலர் பொழில்சூழ் சண்பைப் புரவலர் போது கின்றார். (எ௩சு)

வையக முய்ய வந்த வள்ளலார் மடத்தி னின்று
மெய்யணி நீற்றுத் தொண்டர் வெள்ளமுந் தாமும் போந்து
கையிணை தலையின் மீது குவியக்கண் மலர்ச்சி காட்டச்
செய்யவார் சடையார் மன்னுந் திருவால வாயுட் புக்கார். (எ௩எ)

நோக்கிட விதியி லாரை நோக்கியான் வாது செய்யத்
தீக்கணன் மேனி யானே திருவுள மேவியன் றெண்ணில்
பாக்கியப் பயனா யுள்ள பாலறா வாயர் மெய்ம்மை
நோக்கிவண் டமிழ்செய் மாலைப் பதிகந்தா னுவல லுற்றார். (எ௩அ)

கானிடை யாடு வாரைக் காட்டுமா வுரிமுன் பாடித்
தேனலர் கொன்றை யார்தந் திருவுள நோக்கிப் பின்னும்
ஊனமில் வேத வேள்வி யென்றெடுத் துரையின் மாலை
மானமி லமணர் தம்மை வாதில்வென் றழிக்கப் பாடி. (எ௩கூ)

---

**திருவாலவாய் - பண் - கௌசிகம்.**

திருச்சிற்றம்பலம்.

காட்டுமாவதுரித்துரிபோர்த்துட, னாட்டமூன்றுடையாயுரைசெய்வனான்
வேட்டுவேள்விசெய்யாவமண்கையரை, யோட்டிவாதுசெயத்திருவுள்ளமே.

செந்தெனாமுரலுந்திருவாலவாய், மைந்தனேயென்றுவல்லமணாசறச்
சந்தமார்தமிழ்கேட்டமெய்ஞ்ஞானசம், பந்தன்சொற்பகரும்பழிநீங்கவே.

திருச்சிற்றம்பலம்

---

ஆலமே யமுத மாக வுண்டுவா னவர்க்க ளித்துக்
காலனை மார்க்கண் டர்க்காக் காய்ந்தனை யடியேற் கின்று

(எ௩கூ) கானிடை - சுடுகாட்டிலே (அதுவே கோயில்.)

ஞாலநின் புகழே யாக வேண்டுநான் மறைக ளேத்துஞ்
சீலமே யால வாயிற் சிவபெரு மானே யென்றார். (எசய)

திருவாலவாய் - மேலடிமேல்வைப்பு - பண் - பழம்பஞ்சுரம்.
திருச்சிற்றம்பலம்.

வேதவேள்வியைநிந்தனைசெய்துழல், ஆதமில்லியமணொடுதேரரை
வாதில்வென்றழிக்கத்திருவுள்ளமே, பாதிமாதுடனாயபரமனே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென், னாலவாயிலுறையுமெம்மாதியே.

கூடலாலவாய்க்கோனைவிடைகொண்டு, வாடன்மேனியமணரைவாட்டிட
மாடக்காழிச்சம்பந்தன்மதித்தவிப், பாடல்வல்லவர்பாக்கியவாளரே.

திருச்சிற்றம்பலம்.

நாதர்தம் மருண்முன் பெற்று நாடிய மகிழ்ச்சி பொங்கப்
போதுவார் பணிந்து போற்றி விடைகொண்டு புனித நீற்று
மேதகு கோலத் தோடும் விருப்புறு தொண்டர் சூழ
மூதெயிற் கபாட நீடு முதற்றிரு வாயில் சார்ந்தார். (எசக)

அம்மலர்க் குழலி னார்க்கு மமைச்சர்க்கு மருள வேண்டிச்
செம்மணிப் பலகை முத்தின் சிவிகைமேற் கொண்ட போதில்
எம்மருங் கினிலுந் தொண்ட ரெடுத்தவார்ப் பெல்லை யின்றி
மும்மைநீ டுலக மெல்லா முழுதுட னிறைந்த தன்றே. (எசஉ)

பல்லிய நாதம் பொங்கப் படர்திரு நீற்றின் சோதி
நல்லொளி வட்ட மாகி நண்ணிமேல் வருவ தென்ன
வில்வளர் தாளக் கோவை வெண்குடை நிழற்ற வெவ்வே
றெல்லையின் முத்தின் காளந் தாரைசங் கெங்கு மோத. (எசங)

கண்ணினுக் கணியா யுள்ளா ரெழுச்சியிற் காட்சி பெற்றார்
நண்ணிய சமயம் வேறு நம்பின ரெனினு முன்பு
பண்ணிய தவங்க ளென்கொல் பஞ்சவன் றஞ்ச மேவிப்
புண்ணிய மூர்த்தி வந்து மதுரையிற் புகுத வென்றார். (எசச)

தென்னவன் றேவி யாருந் திருமணிச் சிவிகை மீது
பின்வர வமைச்சர் முன்பு பெருந்தொண்டர் குழாத்துச் செல்லப்
பொன்னணி மாட வீதி யூடெழுந் தருளிப் புக்கார்
கன்னிநா டுடையான் கோயில் காழிநா டுடைய பிள்ளை. (எசரு)

கொற்றவன் றன்பான் முன்பு குலச்சிறை யார்வந் தெய்திப்
பொற்றட மதில்சூழ் சண்பைப் புரவலர் வரவு கூற
முற்றுயர் சிறிது நீங்கி முழுமணி யணிப்பொற் பீட
மற்றவன் முடியின் பக்கத் திடுகென வல்ல னானன். (எசசு)

(எசங) வில் - ஒளி.

மந்திரி யாரைப் பின்னு மெதிர்செல மன்ன னேவச்
சிந்தையுண் மகிழ்ந்து போந்தார் செயலையான் சமயத் துள்ளோர்
பைந்துண ரலங்கன் மன்னன் பரிசுகண் டிதுவோ பண்பால்
நந்தனிச் சமயந் தன்னை நாட்டுமா றென்று பின்னும். (எசஎ)

நின்னற நெறியை நீயே காத்தருள் செய்தி யாகில்
அன்னவர் தம்மை யிங்கே யழைத்தனை யவரும் யாமு
முன்னுற வொக்கத் தீர்க்க மொழிந்துமற் றவராற் றீர்ந்த
தென்னினு மியாமுந் தீர்த்தோ மாகவு மிசைவா யென்றார். (எசஅ)

பொய்தவ மாகக் கொண்ட புன்றலைச் சமணர் கூறச்
செய்தவப் பயன்வந் தெய்துஞ் செவ்விமுன் னுறுத லாலே
எய்திய தெய்வச் சார்வா லிருதிறத் தீருந் தீருங்
கைதவம் பேச மாட்டே னென்றுகை தவனுஞ் சொன்னான். (எசகூ)

என்றவ னுரைப்பக் குண்ட ரெண்ணங்கெட் டிருந்த வெல்லைத்
தென்றமிழ் நாடு செய்த செய்தவக் கொழுந்து போல்வார்
வன்றனிப் பவன முன்னர் வாயிலு ளணைந்து மாடு
பொன்றிகழ் தரளப் பத்திச் சிவிகைநின் றிழிந்து புக்கார். (எரு0)

குலச்சிறை யார்முன் பெய்தக் கொற்றவன் றேவி யாருந்
தலத்திடை யிழிந்து சென்றார் தண்டமிழ் நாட்டு மன்னன்
நிலத்திடை வானி னின்று நீளிரு ணீங்க வந்த
கலைச்செழுந் திங்கள் போலுங் கவுணியர் தம்மைக் கண்டான். (எருக)

கண்டவப் பொழுதே வேந்தன் கையெடுத் தெய்த நோக்கித்
தண்டுணர் முடியின் பாங்கர்த் தமனியப் பீடங் காட்ட
வண்டமிழ் விரகர் மேவி யதன்மிசை யிருந்தார் மாயை
கொண்டவல் லமண ரெல்லாங் குறிப்பினு ளச்சங் கொண்டார். (எருஉ)

செழியனும் பிள்ளை யார்தந் திருமேனி காணப் பெற்று
விழியுற நோக்க லாலே வெம்மைநோய் சிறிது நீங்கி
அழிவுறு மன்னோர் நிற்க வந்தணர் வாழ்வை நோக்கிக்
கெழுவுறு பதியா தென்று விருப்புடன் கேட்ட போது. (எருங)

வேறு.

பொன்னிவளந் தருநாட்டுப் புனற்பழனப் புறம்பணைசூழ்
கன்னிமதிற் கழுமலநாங் கருதுமூ ரெனச்சிறந்த
பன்னிரண்டு பெயர்பற்றும் பரவியசொற் றிருப்பதிகந்
தென்னவன்முன் பருள்செய்தார் திருஞான சம்பந்தர். (எருச)

---

(எசகூ) கைதவம் - வஞ்சனை. (எரு0) பவனம் - கோயில்; அரமனை. (எருஉ) தமனியம் - பொன்.

**திருப்பிரமபுரத் - திருச்சக்கரமாற்று - பண் - காந்தாரம்.**

திருச்சிற்றம்பலம்.

பிரமனூர்வேணுபுரம்புகலிவெங்குருப்பெருநீர்த்தோணி
புரமன்னுபூந்தராய்பொன்னஞ்சிரபுரம்புறவம்வண்சண்பை
யரன்மன்னுதண்காழிகொச்சைவயமுள்ளிட்டங்காதியாய
பரமனூர்பன்னிரண்டாய்நின்றதிருக்கழுமலநாம்பரவுமூரே.

காவிமலர்புரையுங்கண்ணூர்கழுமலத்தின்பெயரைநாளும்
பாவியசீர்ப்பன்னிரண்டுநன்னூலாப்பத்திமையாற்பனுவன்மாலை
நாவினலம்புகழ்சீர்நான்மறையான்ஞானசம்பந்தன்சொன்ன
மேவியிசைமொழிவார்விண்ணவரிலெண்ணுதலைவிருப்புளாரே.

திருச்சிற்றம்பலம்.

---

பிள்ளையார் செம்பொன்மணிப் பீடத்தி லிருந்தபொழு
துள்ளநிறை பொறாமையினு லுழையிருந்த காரமணர்
கொள்ளுமனத் திடையச்ச மறைத்துமுகங் கோபத்தீத்
துள்ளியெழு மெனக்கண்கள் சிவந்துபல சொல்லுவார். (எ௫௫)

காலையெழுங் கதிரவனைப் புடைசூழுங் கருமுகில்போற்
பீலிசேர் சமண்கையர் பிள்ளையார் தமைச்சூழ்வார்
ஏலவே வாதினுல் வெல்வதனுக் கெண்ணித்தாங்
கோலுநூ லெடுத்தோதித் தலைதிமிர்ப்பக் குரைத்தார்கள். (எ௫௬)

பிள்ளையா ரதுகேளாப் பேசுகநும் பொருளெல்லை
உள்ளவா றென்றருள வூத்தைவாய்ப் பறிதலையர்
துள்ளியெழுந் தனேகராய்ச் சூழ்ந்துபத றிக்கதற
ஒள்ளிழையா ரதுகண்டு பொறாராகி யுண்ணடுங்கி. (எ௫௭)

வேறு.

தென்னவன் றன்னை நோக்கித் திருமேனி யெளியர் போலும்
இன்னருட் பிள்ளை யார்மற் றிவருவ ரெண்ணி லார்கண்
மன்னநின் மயக்க மெங்கள் வள்ளலார் தீர நல்கும்
பின்னையிவ் வமணர் மூள்வார் வல்லரேற் பேச வென்றார். (எ௫௮)

மாறனு மவரை நோக்கி வருந்தனீ யென்று மற்று
வேறுவா தென்கொ லென்மேல் வெப்பொழித் தருகர் நீரும்
ஆறணி சடையி னூருக் கன்பரா மிவரு நீங்கள்
தேறிய தெய்வத் தன்மை யென்னிடைத் தெரிப்பீ ரென்றான். (எ௫௯)

ஞானவா ரமுத முண்டார் நற்றவத் திருவை யொத்த
மானினேர் விழியி னுய்கேண் மற்றெனைப் பால னென்று

---

(எ௫௫) உழை-அருகே. (எ௫௬) திமிர்ப்ப - சொல்வேகத்தால் நடுக்குற்று வருந்த. குரைத்தார்கள் என்றதனால் அமணர்கள் சொல்லிழிவு தோன்றுகிறது. (எ௫௭) ஒள் இழையார் - மங்கையர்க்கரசியார். (எ௫௮) உவர் - அமணர்கள்.

நீநனி யஞ்ச வேண்டா நிலையிலா வமணர்க் கென்றும்
யானெளி யேன லேனென் றெழுந்திருப் பதிகம் பாடி. (எசு௦)

---

**திருவாலவாய் - பண் - கொல்லி.**

திருச்சிற்றம்பலம்.

மானினேர்விழிமாதராய்வழுதிக்குமாபெருந்தேவிகேள்
பானல்வாயொருபாலனீங்கிவ னென்றுநீபரிவெய்திடேல்
ஆனைமாமலையாதியாயவிடங்களிற்பலவல்லல்சேர்
ஈனர்கட்கெளியேனலேன்றிருவாலவாயரனிற்கவே.

எக்கராமமண்கையருக்கெளியேனலேன்றிருவாலவாய்ச்
சொக்கனென்னுளிருக்கவேதுளங்கும்முடித்தென்னன்முன்னிவை
தக்கசீர்ப்புகலிக்குமன்றமிழ்நாதன்ஞானசம்பந்தன்வாய்
ஒக்கவேயுரைசெய்தபத்துமுரைப்பவர்க்கிடரில்லையே.

திருச்சிற்றம்பலம்.

---

பெற்றியா லருளிச் செய்த பிள்ளையார் தமக்கு முன்னஞ்
சுற்றுநின் றழைத்த லோவா வருகர்க்குந் தென்னர் கோமான்
இற்றைநா ளென்னை யுற்ற பிணியைநீ ரிகலித் தீருந்
தெற்றெனத் தீர்த்தார் வாதில் வென்றவ ரென்று செப்ப. (எசுக)

மன்னவன் மாற்றங் கேட்டு வடிவுபோன் மனத்து மாசு
துன்னிய வமணர் தென்னர் தோன்றலை நோக்கி நாங்கள்
உன்னுடம் பதனில் வெப்பை யொருபுடை வாம பாக
முன்னமந் திரித்துத் தெய்வ முயற்சியாற் றீர்த்து மென்றார். (எசுஉ)

யாதுமொன் றறிவி லாதா ரிருளென வணையச் சென்று
வாதினின் மன்ன வன்றன் வாமபா கத்தைத் தீர்ப்பார்
மீதுதம் பீலி கொண்டு தடவிட மேன்மேல் வெப்புத்
தீதுறப் பொறாது தென்னன் சிரபுரத் தவரைப் பார்த்தான். (எசுங)

தென்னவ னோக்கங் கண்டு திருக்கழு மலத்தார் செல்வர்
அன்னவன் வலப்பால் வெப்பை யாலவா யண்ண னீறே
மன்னுமந் திரமு மாகி மருந்துமாய்த் தீர்ப்ப தென்று
பன்னிய மறைக ளேத்திப் பகர்திருப் பதிகம் பாடி. (எசுச)

---

**திருவாலவாய் - திருநீற்றுப்பதிகம் - பண் - காந்தாரம்.**

திருச்சிற்றம்பலம்.

மந்திரமாவதுநீறு வானவர்மேலதுநீறு
சுந்தரமாவதுநீறு துதிக்கப்படுவதுநீறு
தந்திரமாவதுநீறு சமயத்திலுள்ளதுநீறு
செந்துவர்வாயுமைபங்கன் றிருவாலவாயான்றிருநீறே.

---

(எசுக) ஓவா - நீங்கா. இகலி - வேறுபட்டு.

ஆற்றலடல்விடையேறுமாலவாயான்றிருநீற்றைப்
போற்றிப்புகலிநிலாவுபூசுரன்ஞானசம்பந்தன்
றேற்றித்தென்னனுடலுற்றதீப்பிணியாயினதீரச்
சாற்றியபாடல்கள்பத்தும்வல்லவர்நல்லவர்தாமே.

திருச்சிற்றம்பலம்.

---

திருவளர் நீறு கொண்டு திருக்கையாற் றடவத் தென்னன்
பொருவரு வெப்பு நீங்கிப் பொய்கையிற் குளிர்ந்த தப்பான்
மருவிய விடப்பான் மிக்க வழலெழ மண்டு தீப்போல்
இருபுடை வெப்புங் கூடி யிடங்கொளா தென்னப் பொங்க. (எசுரு)

உறியுடைக் கையர் பாயி னுடுக்கையர் நடுக்க மெய்திச்
செறிமயிற் பீலி தீயத் தென்னன்வெப் புறுதீத் தம்மை
எறியமா சுடலுங் கன்றி யுருகுவிட் டேற நிற்பார்
அறிவுடை யாரை யொத்தா ரறிவிலா நெறியி னின்றார். (எசுசு)

பலர்தொழும் புகலி மன்ன ரொருபுடை வெப்பைப் பாற்ற
மலர்தலை யுலகின் மிக்கார் வந்ததி சயித்துச் சூழ
இலகுவேற் றென்னன் மேனி வலமிட மெய்தி நீடும்
உலகினிற் றண்மை வெம்மை யொதுங்கிணு லொத்த தன்றே. (எசுஎ)

மன்னவன் மொழிவா னென்னே மதித்தவிக் கால மொன்றில்
வென்நர கொருபா லாகும் வீட்டின்ப மொருபா லாகும்
துன்னுநஞ் சொருபா லாகுஞ் சுவையமு தொருபா லாகும்
என்வடி வொன்றி லுற்றே னிருதிறத் தியல்பு மென்பான். (எசுஅ)

வென்தொழி லருகர் தோற்றீ ரென்னைவிட் டகல நீங்கும்
வந்தெனை யுய்யக் கொண்ட மறைக்குல வள்ள லாரே
இந்தவெப் படைய நீங்க வெனக்கருள் புரிவீ ரென்று
சிந்தையாற் றொழுது சொன்னான் செல்கதிக் கணிய னானான். (எசுகூ)

திருமுகங் கருணை காட்டத் திருக்கையா னீறு காட்டிப்
பெருமறை துதிக்கு மாற்றாற் பிள்ளையார் போற்றிப் பின்னும்
ஒருமுறை தடவ வங்க ணொழிந்துவெப் பகன்று பாக
மருவுதீப் பிணியு நீங்கி வழுதியு முழுது முய்ந்தான். (எஎ௦)

கொற்றவன் றேவி யாருங் குலச்சிறை யாருந் தீங்கு
செற்றவர் செய்ய பாத தாமரை சென்னி சேர்த்துப்
பெற்றனம் பெருமை யின்று பிறந்தனம் பிறவா மேன்மை
உற்றனன் மன்ன னென்றே யுளங்களித் துவகை மிக்கார். (எஎ௧)

மீனவன் றன்மே லுள்ள வெப்பெலா முடனே மாற
ஆனபே ரின்ப மெய்தி யுச்சிமே லங்கை கூப்பி

மானமொன் றில்லார் முன்பு வன்பிணி நீக்க வந்த
ஞானசம் பந்தர் பாத நண்ணினா னுய்ந்தே னென்றான். (எஎஉ)

வே று.

கந்துசீறு மாலியானை மீனவன் கருத்துநேர்
வந்தவாய்மை கூறமற்று மாசுமேனி நீசர்தா
முந்தைமந் திரத்துவிஞ்சை முற்றுமெஞ்ச வஞ்சியே
சிந்தைசெய்து கைவருந் திறந்தெரிந்து தேடுவார். (எஎந.)

சைவமைந்தர் சொல்லின்வென்றி சந்தவின்சொன் மாலையாற்
கைதவன்றன் வெப்பொழித்த தன்மைகண் டறிந்தபின்
மெய்தெரிந்த தர்க்கவாதம் வெல்லலாவ தன்றுவே
றெய்துதீயி னீரில்வெல்வ தென்றுதம்மி லெண்ணினார். (எஎச)

பிள்ளையாரு முங்கள்வாய்மை பேசுமின்க ளென்றலுந்
தள்ளுநீர்மை யார்கள்வேறு தர்க்கவாதி னுத்தரங்
கொள்ளும் வென்றி யன்றியே குறித்தகொள்கை யுண்மைதான்
உள்ளவாறு கட்புலத்தி லுய்ப்பதென்ன வொட்டினார். (எஎரு)

என்றுவாது கூறலு மிருந்ததென்னர் மன்னனுங்
கன்றியென் னுடம்பொடுங்க வெப்புநோய் கவர்ந்தபோ
தொன்றுமங் கொழித்திலீர்க ளென்னவா துமக்கெனச்
சென்றுபின்னு முன்னுநின்று சில்லிவாயர் சொல்லுவார். (எஎசு)

என்னவாது செய்வதென் றுரைத்ததே வினவெனச்
சொன்னவாச கந்தொடங்கி யேடுகொண்டு சூழ்ச்சியான்
மன்னுதம் பொருட்கருத்தின் வாய்மைதீட்டி மாட்டினால்
வெந்நெருப்பின் வேவுறாமை வெற்றியாவ தென்றனர். (எஎஎ)

என்றபோது மன்னனோன் றியம்புமுன்பு பிள்ளையார்
நன்றுநீ ருரைத்தவாறு நாடுதீயி லேடுதான்
வென்றிடிற் பொருட்கருத்து மெய்ம்மையாவ தென்றிரேல்
வன்றனிக்கை யானைமன்னன் முன்புவம்மி னென்றனர். (எஎஅ)

வே று.

அப்ப டிக்கெதி ரமணரு மிணங்குறு மளவில்
ஒப்பில் வண்புகழ்ச் சண்பையர் காவல ருரையாற்
செப்ப ருந்திறன் மன்னனுந் திருந்தவை முன்னர்
வெப்பு றுந்தழ லமைக்கென வினைஞரை விடுத்தான். (எஎகூ)

---

(எஎந) கந்துசீறு மால்யானை - கட்டுத்தறியைக் கோபிக்கும் மதமயக்கமுடைய யானைகளையுடைய. எஞ்ச-குறைய. (எஎரு) கட்புலத்தில் உய்ப்பதென்ன - பிரத்தியட்சத்தில் காட்டி வெல்வதே என்று. ஒட்டினார் - நிச்சயித்தார்கள், உடன்பட்டார்கள்.

எய மாந்தரு மிந்தனங் குறைத்துட னடுக்கித்
தீய மைத்தலுஞ் சிகைவிடு புகையொழிந் தெழுந்து
காயும் வெவ்வழற் கடவுளும் படரொளி காட்ட
ஆயு முத்தமிழ் விரகரு மணையவந் தருளி. (எஅ0)

செங்க ணேற்றவ ரேபொரு ளென்றுதாந் தெரித்த
பொங்கி சைத்திருப் பதிகநன் முறையினைப் போற்றி
எங்க ளாதனே பரம்பொரு ளெனத்தொழு தெடுத்தே
அங்கை யான்முடி மிசைக்கொண்டு காப்புநா ணவிழ்த்தார். (எஅக)

சாற்று மெய்ப்பொரு டருந்திரு முறையினைத் தாமே
நீற்று வண்கையான் மறித்தலும் வந்துநேர்ந் துளதால்
நாற்ற டம்புயத் தண்ணலார் மருவுநள் ளாறு
போற்று மப்பதி கம்போக மார்த்தபூண் முலையாள். (எஅஉ)

---

**திருநள்ளாறு - பண் - தக்கராகம்.**

திருச்சிற்றம்பலம்.

போகமார்த்தபூண்முலையாள்தன்னொடும்பொன்னகலம்
பாகமார்த்தபைங்கண்வெள்ளேற்றண்ணல்பரமேட்டி
யாகமார்த்ததோலுடையன்கோவணவாடையின்மேல்
நாகமார்த்தநம்பெருமான்மேயதுநள்ளாறே.

தண்புனலும்வெண்பிறையுந்தாங்கியதாழ்சடையன்
நண்புகல்லார்மல்குகாழிஞானசம்பந்தனல்ல
பண்புநள்ளாறேத்துபாடல்பத்துமிவைவல்லார்
உண்புநீங்கிவானவரோடுலகிலுறைவாறே.

திருச்சிற்றம்பலம்.

---

அத்தி ருப்பதி கத்தினை யமர்ந்துகொண் டருளி
மைத்த வெங்கடு மிடற்றுநள் ளாறரை வணங்கி
மெய்த்த நற்றிரு வேட்டினைக் கழற்றிமெய்ம் மகிழ்ந்து
கைத்த லத்திடைக் கொண்டனர் கவுணியர் தலைவர். (எஅ௩)

நன்மை யுய்க்குமெய்ப் பதிகத்தி னாதனென் றெடுத்தும்
என்னை யாளுடை யீசன்ற னாமமே யென்று
மன்னு மெய்ப்பொரு ளாமெனக் காட்டிட வன்னி
தன்னி லாகெனத் தளிரிள வளரொளி பாடி. (எஅ௪)

---

(எஅ0) இந்தனம் குறைத்து - கட்டைகளை வெட்டி. (எஅ௪) வன்னிதன்னில் ஆகென - அக்கினியில் அழியாது நிலைபெறுக என்று.

திருநள்ளாறு - திருவிராகம் - பண் - சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

தளிரிளவளரொளிதனதெழில்தருதிகழ்மலைமகள்
குளிரிளவளரொளிவனமுலையிணையவைகுலவலில்
நளிரிளவளரொளிமருவுநள்ளாறர்தந்நாமமே
மிளிரிளவளரெரியிடிலிவைபழுதிலைமெய்ம்மையே.

சிற்றிடையரிவைதன்வனமுலையிணையொடுசெறிதரு
நற்றிறமுறுகழுமலநகர்ஞானசம்பந்தன
கொற்றவனெதிரிடையெரியினிலிடவிவைகூறிய
சொற்றெரியொருபதுமறிபவர்துயரிலர்தூயரே.

திருச்சிற்றம்பலம்

---

செய்ய தாமரை யகவித ழினுமிகச் சிவந்த
கையி லேட்டினைக் கைதவன் பேரவை காண
வெய்ய தீயினில் வெற்றரை யவர்சிந்தை வேவ
வைய முய்ந்திட வந்தவர் மகிழ்ந்துமுன் னிட்டார். (எஅரு)

இட்ட வேட்டினி லெழுதிய செந்தமிழ்ப் பதிக
மட்டு லாங்குழல் வனமுலை மலைமகள் பாகத்
தட்ட மூர்த்தியைப் பொருளென வுடைமையா லமர்ந்து
பட்ட தீயிடைப் பச்சையாய் விளங்கிய தன்றே. (எஅசு)

மைய னெஞ்சுடை யமணருந் தம்பொருள் வரைந்த
கையி லேட்டினைக் கதுவுசெந் தீயினி லிடுவார்
உய்யு மோவிது வெனவுறுங் கவலையா முணர்வால்
நையு நெஞ்சின ராகியே நடுங்கிநின் றிட்டார். (எஅஎ)

அஞ்சு முள்ளத்த ராகியு மறிவிலா வமணர்
வெஞ்சு டர்ப்பெருந் தீயினில் விழுத்திய வேடு
பஞ்சு தீயிடைப் பட்டது படக்கண்டு பயத்தால்
நெஞ்சு சோரவும் பீலிகை சோர்ந்திலர் நின்றார். (எஅஅ)

மான மன்னவ னவையின்முன் வளர்த்தசெந் தீயின்
ஞான முண்டவ ரிட்டவே டிசைத்தநா ழிகையில்
ஈன மின்மைகண் டியாவரும் வியப்புற வெடுத்தார்
பான்மை முன்னையிற் பசுமையும் புதுமையும் பயப்ப. (எஅகூ)

எடுத்த வேட்டினை யவையின்முன் காட்டியம் முறையில்
அடுத்த வண்ணமே கோத்தனு மதிசயித் தரசன்
தொடுத்த பீலிமுன் றூக்கிய கையரை நோக்கிக்
கடுத்து நீரிட்ட வேட்டினைக் காட்டுமி னென்றான். (எகூ0)

---

(எஅஎ) கதுவு - எரிக்கும்.

வேறு.

அருகர்தா மிட்ட வேவு வாங்கச்சென் றணையும் போதிற்
பெருகுதீக் கதுவ வெந்து பேர்ந்தமை கண்ட மன்னன்
தருபுனல் கொண்டு செந்தீத் தணிப்பித்தான் சமண ரங்குக்
கருகிய சாம்ப ரோடுங் கரியலான் மற்றென் காண்பார். (எகூக)

செய்வதொன் றறிகி லாதார் திகைப்பினாற் றிரண்ட சாம்பல்
கையினாற் பிசைந்து தூற்றிப் பார்ப்பது கண்ட மன்னன்
எய்திய நகையி னோடு மேடின்ன மரித்துக் காணும்
பொய்யினோன் மெய்யை யாக்கப் புகுந்தநீர் போமி னென்றான். (எகூஉ)

வெப்பெனுந் தீயில் யான்முன் வீடுபெற் றுய்ய நீங்கள்
அப்பொழு தழிந்து தோற்றீ ராதலா லதுவா றாக
இப்பொழு தெரியி லிட்ட வேடுய்ந்த தில்லை யென்றாற்
றுப்புர வுடையீர் நீங்கள் தோற்றிலீர் போலு மென்றான். (எகூஙு)

தென்னவ னகையுட் கொண்டு செப்பிய மாற்றந் தேரார்
சொன்னது பயனாக் கொண்டு சொல்லுவார் தொடர்ந்த வாது
மூன்னுற விருகாற் செய்தோ முக்காலி லொருக்கால் வெற்றி
என்னினு முடையோ மெய்ம்மை யினியொன் று காண்ப தென்றார். (எகூச)

தோற்கவு மாசை நீங்காத் துணிவிலார் சொல்லக் கேட்டிம்
மாற்றமென் னாவ தென்று மன்னவன் மறுத்த பின்னு
நீற்றணி விளங்கு மேனி நிறைபுகழ்ச் சண்பை மன்னர்
வேற்றுவா தினியென் செய்வ தென்றலு மேற்கோ ளேற்பார். (எகூரு)

நீடுமெய்ப் பொருளி னுண்மை நிலைபெறுந் தன்மை யெல்லாம்
ஏடுற வெழுதி மற்றவ் வேட்டினை யாமு நீரும்
ஓடுநீ ராற்றி லிட்டா லொழுகுதல் செய்யா தங்கு
நாடிமுன் றங்கு மேடு நற்பொருள் பரிப்ப தென்றார். (எகூசு)

என்றமண் கையர் கூற வேறுசீர்ப் புகலி வேந்தர்
நன்றது செய்வோ மென்றங் கருள்செய நணுக வந்து
வென்றிவே லமைச்ச னார்தாம் வேறினிச் செய்யு மிவ்வா
தொன்றினுந் தோற்றார் செய்வ தொட்டியே செய்வ தென்றார். (எகூஎ)

அங்கது கேட்டு நின்ற வமணரு மவர்மேற் சென்ற
பொங்கிய வெகுளி கூரப் பொறாமைகா ரணமே யாகத்
தங்கள்வாய் சோர்ந்து தாமே தனிவாதி லழிந்தோ மாகில்
வெங்கழு வேற்று வானிவ் வேந்தனே யென்று சொன்னார். (எகூஅ)

---

(எகூஙு) துப்புரவு - வன்மையுடைய.

மற்றவர் சொன்ன வார்த்தை கேட்டலு மலய மன்னன்
செற்றத்தா லுரைத்தி ருங்கள் செய்கையு மறந்தீ ரென்று
பற்றிய பொருளி னேடு படர்புனல் வைகை யாற்றிற்
பொற்புற விடுவ தற்குப் போதுவ தென்று கூற. (௭௯௯)

பிள்ளையார் முன்னம் பைம்பொற் பீடத்தி னிழிந்து போந்து
தெள்ளுநீர்த் தரளப் பத்திச் சிவிகைமே லேறிச் சென்றார்
வள்ளலா ரவர்தம் பின்பு மன்னன்மா வேறிச் சென்றான்
உள்ளவா றறிகி லாதா ருணர்வுமா லேறிச் சென்றார். (௮௦௦)

தென்னவன் வெப்புத் தீர்ந்து செழுமணிக் கோயி னீங்கிப்
பின்னுற வணைந்த போது பிள்ளையார் பெருகுஞ் செல்வ
மன்னிய மதுரை மூதூர் மறுகில்வந் தருளக் கண்டு
துன்னிய மாதர் மைந்தர் தொழுதுவே றினைய சொன்னார். (௮௦௧)

மீனவன் கொண்ட வெப்பை நீக்கிநம் விழுமந் தீர்த்த
ஞானசம் பந்த ரிந்த நாயனார் காணு மென்பார்
பானறுங் குதலைச் செய்ய பவளவாய்ப் பிள்ளை யார்தா
மானசீர்த் தென்ன னாடு வாழவந் தணைந்தா ரென்பார். (௮௦௨)

எரியிடை வாதிற் றோற்ற திவர்க்குநம் மருக ரென்பார்
புரிசடை யண்ண னீறே பொருளெனக் கண்டோ மென்பார்
பெருகொளி முத்தின் பைம்பொற் சிவிகைமேற் பிள்ளை யார்தாம்
வருமழ கென்னே யென்பார் வாழ்ந்தன கண்க ளென்பார். (௮௦௩)

ஏதமே விளைந்த திந்த வடிகண்மா ரியல்பா லென்பார்
நாதனு மால வாயி னம்பனே காணு மென்பார்
போதமா வதுவு முக்கட் புராணனை யறிவ தென்பார்
வேதமு நீறு மாகி விரவிடு மெங்கு மென்பார். (௮௦௪)

அடிகண்மார் முகங்க ளெல்லா மழிந்தன பாரீ ரென்பார்
கொடியவஞ் சனைக ளெல்லாங் குலைந்தன போலு மென்பார்
வடிகொள்வேன் மாறன் காதன் மாறின வண்ண மென்பார்
விடிவதாய் முடிந்த திந்த வெஞ்சம ணிருளு மென்பார். (௮௦௫)

நெருப்பினிற் றோற்றார் தாங்க ணீரில்வெல் வாரோ வென்பார்
இருப்புநெஞ் சுடைய ரேனும் பிள்ளையார்க் கெதிரோ வென்பார்
பருப்பொரு ளுணர்ந்தார் தாங்கள் படுவன பாரீ ரென்பார்
மருப்புடைக் கழுக்கோல் செய்தார் மந்திரி யார்தா மென்பார். (௮௦௬)

ஏடுகள் வைகை தன்னி லிடுவதற் கணைந்தா ரென்பார்
ஓடுநீ ருடன்செ லாது நிற்குமோ வோலை யென்பார்

---

(௮௦௦) மாஏறி - குதிரைஏறி. மால்ஏறி - மயக்கமேறி. (௮௦௨) விழுமம்-துன்பம்.

நீடிய ஞானம் பெற்றார் நிறுத்தவும் வல்ல ரென்பார்
நாடெலாங் காண விங்கு நண்ணுமா காணீ ரென்பார். (அ௦௭)

தோற்றவர் கழுவி லேறத் துணிவதே யருக ரென்பார்
ஆற்றிய வருளின் மேன்மைப் பிள்ளையார்க் கழகி தென்பார்
நீற்றினாற் றென்னன் றீங்கு நீங்கிய வண்ணங் கண்டார்
போற்றுவா ரெல்லாஞ் சைவ நெறியினைப் போற்று மென்பார். (அ௦அ)

இன்னன விரண்டு பாலு மீண்டின ரெடுத்துச் சொல்ல
மின்னொளி மணிப்பொற் காம்பின் வெண்குடை மீது போதப்
பன்மணிச் சிவிகை தன்மேற் பஞ்சவ னாட்டு ளோர்க்கு
நன்னெறி காட்ட வந்தார் நான்மறை வாழ வந்தார். (அ௦௯)

தென்றமிழ் விளங்க வந்த திருக்கழு மலத்தான் வந்தான்
மன்றுளா ரளித்த ஞான வட்டில்வண் கையன் வந்தான்
வென்றுல குய்ய மீள வைகையில் வெல்வான் வந்தான்
என்றுபன் மணிச்சின் னங்க ளெண்டிசை நெருங்கி யெங்க. (அ௧௦)

பன்மணி முரசஞ் சூழ்ந்த பல்லிய மியம்பப் பின்னே
தென்னனுந் தேவி யாரு முடன்செலத் திரண்டு செல்லும்
புன்னெறி யமணர் வேறோர் புடைவரப் புகலி வேந்தர்
மன்னிய வைகை யாற்றின் கரைமிசை மருவ வந்தார். (அ௧௧)

கார்கெழு பருவம் வாய்ப்பக் காமுறு மகளி ருள்ளஞ்
சீர்கெழு கணவன் றன்பால் விரைவுறச் செல்லு மாபோல்
நீர்கெழு பௌவ நோக்கி நிரைதிரை யிரைத்துச் செல்லும்
பார்கெழு புகழின் மிக்க பண்புடை வைகை யாறு. (அ௧௨)

ஆற்றினீர் கடுக வோடு மருங்குற வரச னோக்கி
நீற்றணி திகழ்ந்த மேனி நிறைமதிப் பிள்ளை யாரும்
வேற்றுரு வருகர் நீரும் விதித்தவே டிடுக வென்றான்
தோற்றவர் தோலா ரென்று முன்னுறத் துணிந்திட் டார்கள். (அ௧௩)

படுபொரு ளின்றி நெல்லிற் பதடிபோ லுள்ளி லார்மெய்
அடுபவர் பொருளை யத்தி நாத்தியென் றெழுதி யாற்றிற்
கடுகிய புனலைக் கண்டு மவாவினாற் கையி லேடு
விடுதலும் விரைந்து கொண்டு வேலைமேற் படர்ந்த தன்றே. (அ௧௪)

ஆறுகொண் டோடு மேட்டைத் தொடர்ந்தெதி ரணைப்பார் போலத்
தேறுமெய் யுணர்வி லாதார் கரைமிசை யோடிச் சென்றார்
பாறுமப் பொருண்மேற் கொண்ட பட்டிகை யெட்டா தங்கு
நூறுவிற் கிடைக்கு முன்னே போனது நோக்கிக் காணார். (அ௧௫)

---

(அ௧௫) பாறும் - நிலைபெறுதழியும்; ஓடும். பட்டி - ஏடு.

காணவு மெய்தா வண்ணங் கடலின்மேற் செல்லு மேடு
நாணிலா வமணர் தம்மை நட்டாற்றில் விட்டுப் போகச்
சேணிடைச் சென்று நின்றார் சிதறினார் திகைத்தார் மன்னன்
ஆணையில் வழுவ மாட்டா தஞ்சுவா ரணைய மீண்டார். (அகசு)

வேறொரு செயலி லாதார் வெருவுற்று நடுங்கித் தம்பால்
ஈறுவந் தெய்திற் றென்றே மன்னவ னெதிர்வந் தெய்தி
ஊறுடை நெஞ்சி லச்சம் வெளிப்பட வொளிப்பார் போன்று
மாறுகொண் டெரு மிட்டால் வந்தது காண்டு மென்றார். (அகள)

மாசுசே ரமண ரெல்லா மதியினின் மயங்கிக் கூற
ஆசிலா நெறியிற் சேர்ந்த வரசனு மவரை விட்டுத்
தேசுடைப் பிள்ளை யார்தந் திருக்குறிப் பதனை நோக்கப்
பாசுரம் பாட லுற்றார் பரசம யங்கள் பாற. (அகஅ)

தென்னவன் மாறன் றானுஞ் சிரபுரத் தலைவர் தீண்டிப்
பொன்னவில் கொன்றை யார்தந் திருநீறு பூசப் பெற்று
முன்னைவல் வினையு நீங்கி முதல்வனை யறியுந் தன்மை
துன்னினான் வினைக ளொத்துத் துலையென நிற்ற லாலே. (அகக)

வேறு.

உலகியல் வேதநூ லொழுக்க மென்பது
நிலவுமெய்ந் நெறிசிவ நெறிய தென்பதுங்
கலதிவா யமணர்காண் கிலார்க ளாயினும்
பலர்புகழ் தென்னவ னறியும் பான்மையால். (அஉ0)

அந்தணர் தேவரா னினங்கள் வாழ்கவென்
றிந்தமெய்ம் மொழிப்பய னுலக மின்புறச்
சந்தவேள் விகண்மு தல் சங்க ரர்க்குமுன்
வந்தவர்ச் சனைவழி பாடு மன்னவாம். (அஉக)

வேறு.

வேள்வி நற்பயன் வீழ்புன லாவது
நாளு மர்ச்சனை நல்லுறுப் பாதலால்
ஆளு மன்னனை வாழ்த்திய தர்ச்சனை
மூளு மற்றிவை காக்கு முறைமையால். (அஉஉ)

ஆழ்க தீயதென் றோதிற் றயனெறி
வீழ்க வென்றுவே றெல்லா மரன்பெயர்
சூழ்க வென்றது தொல்லுயிர் யாவையும்
வாழி யஞ்செழுத் தோதி வளர்கவே. (அஉங)

(அஉ0) உலகியல் - அறம், பொருள் இன்பம். மெய்நெறி-வீட்டுநெறி. (அஉக) ஆன் இனங்கள் - பசுக்கூட்டங்கள். (அஉஉ) வீழ்புனல் - மழை.

சொன்ன வையக முந்துயர் தீர்கவே
என்னு நீர்மை யிகபரத் திற்றுயர்
மன்னி வாழுல கத்தவர் மாற்றிட
முன்னர் ஞானசம் பந்தர் மொழிந்தனர். (அ௨௪)

அரிய காட்சிய ரென்பதவ் வாதியைத்
தெரிய லாநிலை யாற்றெரி யாரென
உரிய வன்பினிற் காண்பவர்க் குண்மையாம்
பெரிய நல்லடை யாளங்கள் பேசினார். (அ௨௫)

ஆயி னும்பெரி யாரவு ரென்பது
மேய விவ்வியல் பேயன்றி விண்முதற்
பாய பூதங்கள் பல்லுயி ரண்டங்கள்
ஏயும் யாவு மிவர்வடி வென்றதாம். (அ௨௬)

பின்பு மாரறி வாரவர் பெற்றியை
என்ப தியாருணர் வானுஞ்சென் றெட்டொணு
மன்பெ ருந்தன்மை யாரென வாழ்த்தினர்
அன்பு சூழ்சண்பை யாண்டகை யாரவர். (அ௨௭)

வெந்த சாம்பல் விரையென் பதுதம
தந்த மில்லொளி யல்லா வொளியெலாம்
வந்து வெந்தற மற்றப் பொடியணி
சந்த மாக்கொண்ட வண்ணமுஞ் சாற்றினர். (அ௨அ)

தமக்குத் தந்தையர் தாயில ரென்பதும்
அமைத்திங் கியாவையு மாங்கவை வீந்தபோ
திமைத்த சோதி யடக்கிப்பின் னீதலால்
எமக்கு நாதர் பிறப்பில ரென்றதாம். (அ௨௯)

தம்மையே சிந்தி யாவெனுந் தன்மைதான்
மெய்ம்மை யாகி விளங்கொளி தாமென
இம்மை யேநினை வார்தம் மிருவினைப்
பொய்ம்மை வல்லிருள் போக்குவ ரென்றதாம். (அ௩௦)

எந்தை யாரவ ரெவ்வகை யார்கொலென்
றிந்த வாய்மைமற் றெப்பொருட் கூற்றினு
முந்தை யோரையெக் கூற்றின் மொழிவதென்
றந்தண் பூந்தராய் வேந்த ரருளினர். (அ௩௧)

ஆதி யாட்பா லவர்க்கரு ளுந்திற
நாதன் மாட்சிமை கேட்க நவிலுங்கால்

(அ௩௨) ஆதி - சிவபெருமான். ஆட்பாலவர்க்கு - ஆட்கொள்ளும் பகுதியை யுடைய திருத்தொண்டர்களுக்கு.

ஓது மெல்லை யுலப்பில வர்தலின்
யாது மாராய்ச்சி யில்லையா மென்றதாம். (அ௩௨)

அன்ன வாதலி லாதியார் தாளடைந்
தின்ன கேட்கவே யேற்றகோட் பாலவு
முன்னை வல்வினை யும்முடி வெய்துமத்
தன்மை யார்க்கென் றனர்சண்பை காவலர். (அ௩௩)

மின்னு மேதுக்க ளாலெனும் வாய்மைதான்
தன்ன தொப்புவே றின்மையிற் சங்கரன்
இன்ன தன்மையை யேது வெடுத்துக்காட்
டன்ன வற்று லளப்பில னென்றதாம். (அ௩௪)

தோன்று காட்சி சுடர்விட் டுளனென்ப
தான்ற வங்கிப் புறத்தொளி யாயன்பில்
ஊன்ற வுள்ளெழுஞ் சோதியாய் நின்றனன்
ஏன்று காண்பார்க் கிதுபொரு ளென்றதாம். (அ௩௫)

வேறு.

மாதுக்க நீங்க லுறுவீர் மனம்பற்று மென்ப
தாதிச் சுடர்ச்சோதியையன்பி னகத்துள் ளாக்கிப்
போதித்த நோக்குற் றொழியாமற் பொருந்தி வாழ்ந்து
பேதித்த பந்தப் பிறப்பின்னெறி பேர்மி னென்றும். (அ௩௬)

வேறு.

ஈண்டு சாதுக்க ளென்றெடுத் தோதிற்று
வேண்டும் வேட்கைய வெல்லாம் விமலர்தாள்
பூண்ட வன்பினிற் போற்றுவீர் சார்மினென்
றூண்ட சண்பை யரச ரருளினர். (அ௩௭)

வேறு.

ஆடும் மெனவாந் திருப்பாட்டி னமைத்த மூன்று
நீடும் புகழோ பிறர்துன்ப நீத்தற்கோ வென்று
தேடு முணர்வீ ருலகுக்கிவை செய்த தீசர்
கூடுங் கருணைத் திறமென்றனர் கொள்கை மேலோர். (அ௩௮)

கருதுங் கடிசேர்ந்த வெனுந்திருப் பாட்டி லீசர்
மருவும் பெரும்பூசை மறுத்தவர்க் கோறன் முத்தி
தருதன் மையதாதல் சண்டீசர் தஞ்செய்கை தக்கோர்
பெரிதுஞ் சொலக்கேட் டனமென்றனர் பிள்ளை யார்தாம். (அ௩௯)

---

(அ௩௨) ஓதும் எல்லை உலப்பில-யாம் கூறுஞ் சொல்லளவில் அடங்கா. (அ௩௮) அமைத்த மூன்று - ஆடல், கூற்றுதைத்தல், வேதம் பாடல். (அ௩௯) ஈசர்****** மறுத்தவர் - எச்சதத்தனை. கோறல் - கொல்லல்.

வேத முதல்வ னெனும்மெய்த் திருப்பாட் டினினேர்
ஆதி யுலகோ ரிடர்நீங்கிட வேத்த வாடும்
பாத முதலாம் பதினெண் புராணங்க ளென்றே
ஓதென் றுரைசெய் தனர்யாவு மோதா துணர்ந்தார். (அசo)

பாவுற்ற பாராழி வட்டத் திருப்பாட்டி னுண்மை
காவற் றொழிலா னெனுங்கண்ணனுங் காவல் பெற்ற
தியாவர்க்கு மேலாய வீசனரு ளாழி பெற்று
மேவுற்ற சீருற் றதுவென் றனர் வேத வாயர். (அசக)

மாலா யவனென்ன வருந்திருப் பாட்டின் மாலுந்
தோலா மறைநான் முகனுந் தொடர்வா மமரர்
ஏலா வகைசுட்ட நஞ்சுண் டிறவாமைக் காத்த
மேலாங் கருணைத் திறம்வெங்குரு வேந்தர் வைத்தார். (அசஉ)

வே று.

ஆன்வற் றன்றி யென்ற வத்திருப் பாட்டிற் கூடன்
மாநக ரத்துச் சங்கம் வைத்தவன் றேற்றத் தேறு
ஈனர்க ளெல்லேக் கிட்ட வேடுநீ ரெதிர்ந்து செல்லில்
ஞானமீ சன்பா லன்பே யென்றனர் ஞான முண்டார். (அசஙு)

வே று.

வெறியேர் பொழிற்சண் பையர்வேந்தர் மெய்ப்பா சுரத்தைக்
குறியே றியவெல்லே யறிந்துகும் பிட்டே னல்லேன்
சிறியே னறிவுக் கவர்தந்திருப் பாதந் தந்த
நெறியே சிறிதியா னறிநீர்மைகும் பிட்டே னன்பால். (அசச)

* அலரும் விரைசூழ் பொழிற்காழி யுளாதி ஞான
மலருந் திருவாக் குடைவள்ளலா ருள்ள வண்ணம்
பலரு முணர்ந்துய்யப் பகர்ந்து வரைந்தி யாற்றின்
நிலவுந் திருவேடு திருக்கையா னீட்டியிட்டார். (அசரு)

---

## திருப்பாசுரம் - பண் - கவுசிகம்.

திருச்சிற்றம்பலம்.

வாழ்கவந்தணர்வானவரானினம்
வீழ்கதண்புனல்வேந்தனுமோங்குக
ஆழ்கதீயதெல்லாமரனுமமே
சூழ்கவையகமுந்துயர்தீர்கவே.

---

(அசஉ) தோலா - வெற்றியுடைய. (அசச) இத்திருப்பாசுரத்தின் உண்மையை யினிது நுண்ணறிவாலுணரும் பெரியார் தேவாரத்திற்குப் பொருளுரைக்க அஞ்சுவர் என்க.

* சில பிரதிகளில் இத்திருப்பாசுரம் அஉ௯-வது செய்யுளின் கீழ் இருக்கின்றது.

அரியநாட்சியராய்த்தமதங்கைசேர்
எரியரேறுகந்தேறுவர்கண்டமுங்
கரியர்காடுறைவாழ்க்கையராயினும்
பெரியராரறிவாரவர்பெற்றியே.

வெந்தசாம்பல்விரையெனப்பூசியே
தந்தையாரொடுதாயிலர்தம்மையே
சிந்தியாவெழுவார்வினைதீர்ப்பரால்
எந்தையாரவரெவ்வகையார்கொலோ.

ஆட்பாலவர்க்கருளும்வண்ணமுமாதிமாண்புங்
கேட்பான்புகிலளவில்லைகிளக்கவேண்டா
கோட்பாலனவும்வினையுங்குறுகாமையெந்தை
தாட்பால்வணங்கித்தலைநின்றிவைகேட்கதக்கார்.

ஏதுக்களாலுமெடுத்தமொழியாலுமிக்குச்
சோதிக்கவேண்டாசுடர்விட்டுளனெங்கள்சோதி
மாதுக்கநீங்கலுறுவீர்மனம்பற்றிவாழ்மின்
சாதுக்கண்மிக்கீரிறையேவந்துசார்மின்களே.

ஆடும்மெனவும்மருங்கூற்றமுதைத்துவேதம்
பாடும்மெனவும்புகழல்லதுபாவநீங்கக்
கேடும்பிறப்பும்மறக்கும்மெனக்கேட்டீராகில்
நாடுந்திறத்தார்க்கருளல்லதுநாட்டலாமே.

கடிசேர்ந்தபோதுமலரானகைக்கொண்டுநல்ல
படிசேர்ந்தபால்கொண்டங்காட்டிடத்தாதைபண்டு
முடிசேர்ந்தகாலையறவெட்டிடமுக்கண்மூர்த்தி
யடிசேர்ந்தவண்ணமறிந்தார்சொலக்கேட்டுமன்றே.

வேதம்முதல்வன்முதலாகவிளங்கிவைய
மேதப்படாமேயுலகத்தவரேத்தல்செய்யப்
பூதம்முதல்வன்முதலேமுதலாப்பொலிந்த
சூதன்னொலிமாலையென்றேகலிக்கோவைசொல்லே.

பாராழிவட்டம்பகையானலிந்தாட்டவாடிப்
பேராழியானதிடர்கண்டருள்செய்தல்பேணி
நீராழிவிட்டேறிநெஞ்சிடங்கொண்டவர்க்குப்
போராழியீந்தபுகழும்புகழுற்றதன்றே.

மாலாயவனுமறைவல்லநான்முகனும்
பாலாயதேவர்பகரில்லமுதூட்டல்பேணிக்
காலாயமுந்நீர்கடைந்தார்க்கரிதாவெழுந்த
ஆலாலமுண்டங்கமரர்க்கருள்செய்ததாமே.

அற்றன்றியந்தண்மதுரைத்தொகையாக்கினானுந்
தெற்றென்றுதெய்வந்தெளியார்கரைக்கோலைதெண்ணீர்ப்
பற்றின்றிப்பாங்கெதிர்விரவும்பண்புநோக்கிற்
பெற்றென்றுயர்த்தபெருமான்பெருமானுமன்றே.

நல்லார்கள்சேர்புகலிஞானசம்பந்தனல்ல
வெல்லார்களும்பரவுமீசனையேத்துபாடல்

பல்லார்களுமதிக்கப்பாசுரஞ்சொன்னபத்தும்
வல்லார்கள்வானோருலகாளவும்வல்லரன்றே.

திருச்சிற்றம்பலம்.

---

வேறு.

திருவுடைப் பிள்ளை யார்தந் திருக்கையா லிட்ட வேடு
மருவுறும் பிறவி யாற்றின் மாதவர் மனஞ்சென் றாற்போற்
பொருபுனல் வைகை யாற்றி லெதிர்ந்துநீர் கிழித்துப் போகும்
இருநிலத் தோர்கட் கெல்லா மிதுபொரு ளென்று காட்டி. (௮௪௬)

எம்பிரான் சிவனே யெல்லாப் பொருளுமென் றெழுது மேட்டிற்
றம்பிரா னருளால் வேந்தன் றன்னைமுன் னோங்கப் பாட
அம்புய மலராள் மார்ப னனபாய னென்னுஞ் சீர்த்திச்
செம்பியன் செங்கோ லென்னத் தென்னன்கூ னிமிர்ந்த தன்றே. (௮௪௭)

ஏடுநீ ரெதிர்ந்து செல்லும் பொழுதிமை யோர்க ளெல்லாம்
நீடிய வாழ்த்திற் போற்றி நிமிர்ந்தபூ மாரி தூர்த்தார்
ஆடியல் யானை மன்ன னற்புத மெய்தி நின்றான்
பாடுசே ரமண ரஞ்சிப் பதைப்புடன் பணிந்து நின்றார். (௮௪௮)

ஆற்றின்மேற் செல்லு மேடு தொடர்ந்தெடுப் பதற்கு வேண்டிக்
காற்றென விசையிற் செல்லுங் கடும்பரி யேறிக் கொண்டு
கோற்றொழி றிருத்த வல்ல குலச்சிறை யார்பின் சென்றார்
ஏற்றுயர் கொடியி னாரைப் பாடினா ரேடு தங்க. (௮௪௯)

ஏடகம் பிள்ளை யார்தாம் வன்னியென் றெடுத்துப் பாடக்
கூடிய நீரி லேடு குலச்சிறை யாருங் கூடிக்
காடிட மாக வாடுங் கண்ணுதல் கோயின் மாடு
நீடுநீர் நடுவுட் புக்கு நின்றவே டெடுத்துக் கொண்டார். (௮௫௦)

---

**திருஏடகம் - பண் - கோல்லி.**

திருச்சிற்றம்பலம்.

வன்னியுமத்தமுமதிபொதிசடையினன்
பொன்னியதிருவடிபுதுமலரவைகொடு
மன்னியமறையவர்வழிபடவடியவர்
இன்னிசைபாடலரேடகத்தொருவனே.

கோடுசந்தனமகில்கொண்டிழிவைகைநீர்
ஏடுசென்றணைதருமேடகத்தொருவனை
நாடுதென்புகலியுள்ஞானசம்பந்தன
பாடல்பத்திவைவல்லார்க்கில்லையாம்பாவமே.

திருச்சிற்றம்பலம்.

---

தலைமிசை வைத்துக் கொண்டு தாங்கரு மகிழ்ச்சி பொங்க
அலைபுனற் கரையி லேறி யங்கினி தமர்ந்த மேருச்
சிலையுடை யவர்தாள் போற்றி மீண்டுசென் றணைவார் தெய்வ
மலைமகள் குழைத்த ஞான முண்டவர் தம்பால் வந்தார். (அறுக)

மற்றவர் பிள்ளை யார்தம் மலரடி வணங்கிப் போற்றிக்
கொற்றவன் முதலா யுள்ளோர் காணமுன் கொணர்ந்த வேடு
பற்றிய கையி லேந்திப் பண்பினு லியார்க்குங் காட்ட
அற்றருள் பெற்ற தொண்ட ரரவொலி யெழுந்த தன்றே. (அறுஉ)

மன்னவன் மாறன் கண்டு மந்திரி யாரை நோக்கித்
துன்னிய வாதி லொட்டித் தோற்றவிச் சமணர் தாங்கண்
முன்னமே பிள்ளை யார்பா லநுசித முற்றச் செய்தார்
கொன்னுனைக் கழுவி லேற்றி முறைசெய்க வென்று கூற. (அறுஙு)

புகலியில் வந்த ஞானப் புங்கவ ரதனைக் கேட்டும்
இகலில ரெனினுஞ் சைவ ரிருந்துவாழ் மடத்திற் றீங்கு
தகவிலாச் சமணர் செய்த தன்மையாற் சாலு மென்றே
மிகையிலா வேந்தன் செய்கை விலக்கிடா திருந்த வேலை. (அறுச)

பண்புடை யமைச்ச னாரும் பாருளோ ரறியு மாற்றாற்
கண்புடை பட்டு நீண்ட கழுத்தறி நிரையி லேற்ற
நண்புடை ஞான முண்டார் மடத்துத்தீ நாடி யிட்ட
எண்பெருங் குன்றத் தெண்ணா யிரவரு மேறி னார்கள். (அறுரு)

தோற்றவர் கழுவி லேறித் தோற்றிடத் தோற்றுந் தம்பம்
ஆற்றிடை யமண ரோலை யழிவினு லார்ந்த தம்பம்
வேற்றொரு தெய்வ மின்மை விளக்கிய பதாகைத் தம்பம்
போற்றுசீர்ப் பிள்ளை யார்தம் புகழ்ச்சயத் தம்ப மாகும். (அறுசா)

தென்னவன் றனக்கு நீறு சிரபுரச் செல்வ ரீந்தார்
முன்னவன் பணிந்து கொண்டு முழுவது மணிந்து நின்றான்
மன்னனீ றணிந்தா னென்று மற்றவன் மதுரை வாழ்வார்
துன்னிநின் றார்க ளெல்லாந் தூயநீ றணிந்து கொண்டார். (அறுஎ)

பூதிமெய்க் கணிந்து வேந்தன் புனிதனா யுய்ந்த போது
நீதியும் வேத நீதி யாகியே நிகழ்ந்த தெங்கு
மேதினி புனித மாக வெண்ணீற்றின் விரிந்த சோதி
மாதிரந் தூய்மை செய்ய வமணிருண் மாய்ந்த தன்றே. (அறுஅ)

மீனவற் குயிரை நல்கி மெய்ந்நெறி காட்டி மிக்க
ஊனமாஞ் சமணை நீக்கி யுலகெலா முய்யக் கொண்ட

(அறுஉ) அற்று ஆசையற்று. (அறுஅ) மாதிரம் - எட்டுத்திசையும்.

ஞானசம் பந்தர் வாய்மை ஞாலத்திற் பெருகி யோங்கத்
தேனலர் கொன்றை யார்தந் திருநெறி நடந்த தன்றே. (அ௫௯)

மறையவர் வேள்வி செய்ய வானவர் மாரி நல்க
இறைவனன் னெறியி னோங்க விகத்தினி லவனி யின்பங்
குறைவில தெனினுங் கூற்றை யுதைத்தவர் நாமங் கூறி
நிறைகடற் பிறவித் துன்ப நீங்கிடப் பெற்ற தன்றே. (அ௬௦)

அங்கயற் கண்ணி தன்னோ டாலவா யமர்ந்த வண்ணல்
பங்கயச் செய்ய பாதம் பணிவனென் றெழுந்து சென்று
பொங்கொளிச் சிவிகை யேறிப் புகலியர் வேந்தர் போந்தார்
மங்கையர்க் கரசி யாரு மன்னனும் போற்றி வந்தார். (அ௬௧)

எண்ணரும் பெருமைத் தொண்டர் யாவரு மகிழ்ச்சி யெய்திப்
புண்ணியப் பிள்ளை யாரைப் புகழ்ந்தடி போற்றிப் போத
மண்ணெலா முய்ய வந்த வள்ளலார் தம்மைக் கண்டு
கண்ணினாற் பயன்கொண் டார்கள் கன்னிநாட் டவர்க ளெல்லாம். (அ௬௨)

ஆலவா யண்ணல் கோயி லங்கண்முன் றோன்றக் கண்டு
பாலறா வாயர் மிக்க பண்பினாற் றொழுது சென்று
மாலுநான் முகனும் போற்ற மன்னினார் கோயில் வாயிற்
சீலமா தவத்தோர் முன்பு சிவிகைநின் றிழிந்து புக்கார். (அ௬௩)

தென்னவன் றானு மெங்கள் செம்பியன் மகளார் தாமும்
நன்னெறி யமைச்ச னாரும் ஞானசம் பந்தர் செய்ய
பொன்னடிக் கமலம் போற்றி யுடன்புகப் புனிதர் கோயில்
தன்னைமுன் வலங்கொண் டுள்ளாற் சண்பையர் தலைவர் புக்கார். (அ௬௪)

கைகளுந் தலைமீ தேறக் கண்ணிலா னந்த வெள்ள
மெய்யெலாம் பொழிய வேத முதல்வரைப் பணிந்து போற்றி
ஐயனே யடிய னேனை யஞ்சலென் றருள வல்ல
மெய்யனே யென்று வீட லாலவாய் விளம்ப லுற்றார். (அ௬௫)

---

**திருவாலவாய் - திருவிராகம் - பண் - கௌசிகம்.**

திருச்சிற்றம்பலம்.

வீடலாலவாயிலாய்விழுமியார்கணின்கழல்
பாடலாலவாயிலாய்பரவநின்றபண்பனே
காடலாலவாயிலாய்கபாலிநீள்கடிம்மதில்
கூடலாலவாயிலாய்குலாயதென்னகொள்கையே.

போயநீர்வளங்கொளும்பொருபுனற்புகலியான்
பாயகேள்விஞானசம்பந்தனல்லபண்பினால்
ஆயசொல்லின்மாலைகொண்டாலவாயிலண்ணலைத்
தீயதீரவெண்ணுவார்கள்சிந்தையார்வர்தேவரே.

திருச்சிற்றம்பலம்.

ஒன்றுவே றுணர்வு மில்லே னொழிவற நிறைந்த கோல
மன்றினுன் மறைக ளேத்த மானுட ருய்ய வேண்டி
நின்றுநீ யாடல் செய்கை நினைப்பதே நியம மாகும்
என்றுபூம் புகலி மன்ன ரின்றமிழ்ப் பதிகம் பாட. (அசுசு)

தென்னவன் பணிந்து நின்று திருவால வாயின் மேவு
மன்னனே யமணர் தங்கண் மாய்கையான் மயங்கி யானும்
உன்னையா னறிந்தி லேனை யுறுபிணி தீர்த்தாட் கொள்ள
இன்னருட் பிள்ளை யாரைத் தந்தனை யிறைவ வென்றான். (அசுஎ)

சீருடைப் பிள்ளை யாருஞ் சிறப்புடை யடியா ரோடுங்
காரினிற் பொலிந்த கண்டத் திறைவர்தாள் வணங்கிக் காதல்
ஆரருள் பெற்றுப் போற்றி யங்குநின் றரிது நீங்கி
ஏரியன் மடத்தி லுள்ளா லினிதெழுந் தருளிப் புக்கார். (அசுஅ)

நீடுசீர்த் தென்னர் கோனு நேரியன் பாவை யாரு
மாடுசென் றிறைஞ்சி நோக்கி மாளிகை தன்னிற் போக்கிக்
கூடிய மகிழ்ச்சி பொங்கக் கும்பிடும் விருப்பி னாலே
நாடியங் கிருந்து தங்க ளுதரைப் பாட லுற்றார். (அசுகூ)

திருவிய மகத்தி னுள்ளுந் திருநீல கண்டப் பாணர்க்
கருளிய திறமும் போற்றி யவரொடு மளவு ளாவித்
தெருளுடைத் தொண்டர் சூழத் திருத்தொண்டி னுண்மை நோக்கி
இருள்கெட மண்ணில் வந்தா ரினிதமர்ந் திருந்தா ரன்றே. (அஎ0)

---

### திருவாலவாய் - திருவியமகம்.

திருச்சிற்றம்பலம்.

ஆலநீழலுகந்ததிருக்கையேயானபாடலுகந்ததிருக்கையே
பாலினேர்மொழியாளொருபங்கனேபாதமோதலர்சேர்புரபங்கனே
கோலநீறணிமேதகுபூதனேகோதிலார்மனமேவியபூதனே
ஆலநஞ்சமுதுண்டகளத்தனேயாலவாயுறையண்டர்களத்தனே.

ஈனஞானிகடம்மொடுவிரகனேயேறுபல்பொருண்முத்தமிழ்விரகனே
யானகாழியுள்ஞானசம்பந்தனேயாலவாயினின்மேயசம்பந்தனே
யானவானவர்வாயினுளத்தனேயன்பரானவர்வாயினுளத்தனே
நானுரைத்தனசெந்தமிழ்பத்துமேவல்லவர்க்கிவைநற்றமிழ்பத்துமே.

திருச்சிற்றம்பலம்.

---

பூழியன் மதுரை யுள்ளார் புறத்துளா ரமணர் சேரும்
பாழியு மருகர் மேவும் பள்ளியு மான வெல்லாங்
கீழுறப் பறித்துப் போக்கிக் களரொளித் தூய்மை செய்தே
வாழியப் பதிக ளெல்லா மங்கலம் பொலியச் செய்தார். (அஎக)

மீனவன் றேவி யாருங் குலச்சிறை யாரு மிக்க
ஞானசம் பந்தர் பாத நாடொறும் பணிந்து போற்ற
ஆனசண் பையர்கோ னுரு மாலவா யமர்ந்தார் பாதம்
ஊனமர்ந் துருக வேத்தி யுளங்களித் துறையு நாளில். (அஎ௨)

வேறு.

செய்தவத்தாற் சிவபாத விருதயர்தாம் பெற்றெடுத்த
வைதிகசூ ளாமணியை மாதவத்தோர் பெருவாழ்வை
மைதிகழுந் திருமிடற்று ரருள்பெற்ற வான்பொருளை
எய்தியபூம் புகலியிலே யிருந்தநாண் மிகநினைந்தார். (அஎ௩)

ஆனபுகழ்த் திருநாவுக் கரசர்பா லவஞ்செய்த
மானமிலா வமணருடன் வாதுசெய்து வெல்வதற்கு
மீனவன்ற னுய்ய வெண்ணீறு பெருக்குதற்கும்
போனவர்பாற் புகுந்தபடி யறிவனெனப் புறப்படுவார். (அஎ௪)

துடியிடையா டன்னேடுந் தோணியில்வீற் றிருந்தபிரான்
அடிவணங்கி யலர்சண்பை யதனின்றும் வழிக்கொண்டு
படியின்மிசை மிக்குளவாம் பரன்கோயில் பணிந்தேத்தி
வடிநெடுவேன் மீனவன்றன் வளநாடு வந்தணைந்தார். (அஎ௫)

மாமறையோர் வளம்பதிக ளிடைத்தங்கி வழிச்செல்வார்
தேமருவு நறும்பைந்தார்த் தென்னவன்றன் றிருமதுரை
தாமணைந்து திருவால வாயமர்ந்த தனிநாதன்
பூமருவுஞ் சேவடிக்கீழ்ப் புக்கார்வத் தொடும்பணிந்தார். (அஎ௬)

அங்கணரைப் பணிந்துபோந் தருகணைந்தார் தமைவினவ
இங்கெம்மைக் கண்விடுத்த காழியா ரிளவேறு
தங்குமிடந் திருநீற்றுத் தொண்டர்குழாஞ் சாருமிடஞ்
செங்கமலத் திருமடமற் றிதுவென்றே தெரிந்துரைத்தார். (அஎஎ)

செப்புதலு மதுகேட்டுத் திருமடத்தைச் சென்றெய்த
அப்பரெழுந் தருளினு ரெனக்கண்டோ ரடிவணங்கி
ஒப்பில்புகழ்ப் பிள்ளையார் தமக்கோகை யுரைசெய்ய
எப்பொழுது வந்தருளிற் றென்றெதிரே யெழுந்தருள. (அஎஅ)

சிவபாத விருதயர்தா முன்றொழுது சென்றணையத்
தவமான நெறியணையுந் தாதையா ரெதிர்தொழுவார்
அவர்சார்வு கண்டருளித் திருத்தோணி யமர்ந்தருளிப்
பவபாச மறுத்தவர்தம் பாதங்க ணினைவுற்றார். (அஎ௯)

இருந்தவத்தோ ரவர்முன்னே யிணைமலர்க்கை குவித்தருளி
அருந்தவத்தீ ரெனையறியாப் பருவத்தே யெடுத்தாண்ட

(அஎஅ) அப்பர் - தந்தையார், ஓகை - சந்தோஷ சமாசாரம்.

பெருந்தகையெம் பெருமாட்டி யுடனிருந்த தேயென்று
பொருந்துபுகழ்ப் புகலியின்மேற் றிருப்பதிகம் போற்றிசைத்தார். (அ௲௦)

மண்ணினல்ல வென்றெடுத்து மனத்தெழுந்த பெருமகிழ்ச்சி
உண்ணிறைந்த காதலினாற் கண்ணருவி பாய்ந்தொழுக
அண்ணலார் தமைவினவித் திருப்பதிக மருள்செய்தார்
தண்ணறும்பூஞ் செங்கமலத் தாரணிந்த தமிழ்விரகர். (அஅக)

---

திருக்கழுமலம் - பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்

மண்ணினல்லவண்ணம்வாழலாம்வைகலும்
எண்ணினல்லகதிக்கியாதுமோர்குறைவிலை
கண்ணினல்லதுறுங்கழுமலவளநகர்ப்
பெண்ணினல்லாளொடும்பெருந்தகையிருந்ததே.

கருந்தடந்தேன்மல்குகழுமலவளநகர்ப்
பெருந்தடங்கொங்கையோடிருந்தவெம்பிரான்றனை
அருந்தமிழ்ஞானசம்பந்தனசெந்தமிழ்
விரும்புவாரவர்கள்போய்விண்ணுலகாள்வரே.

திருச்சிற்றம்பலம்.

---

திருப்பதிகந் திருக்கடைக்காப் புச்சாத்திச் சிறப்பின்மிகு
விருப்பினு லவர்தமக்கு விருந்தளித்து மேவுநாள்
அருப்புறுமெய்க் காதல்புரி யடியவர்க டம்மோடும்
பொருப்புறுகைச் சிலையார்சேர் பதிபிறவுந் தொழப்போவார். (அஅஉ)

ஆலின்கீழ் நால்வர்க்கங் கறமுரைத்த வங்கணனை
நூலின்கட் பொருள்பாடி நூலறிவார்க் கீந்தானைக்
காலம்பெற் றினிதிறைஞ்சிக் கைதொழுது புறம்போந்தார்
சீலங்கொ டென்னவனுந் தேவியரு முடன்போத. (அஅந)

வேறு.

தேனிலவு பொழின்மதுரைப் புறத்துப் போந்த தென்னவனார் தேவியா ரமைச்சர் சிந்தை, ஊனெகிழும் படியழிந்தங் கொழுகு கண்ணீர் பாய்ந்திழிய வுணர்வின்றி வீழக் கண்டே, யானும்மைப் பிரியாத வண்ண மிந்நாட் டிறைவர்பதி யெனைப்பலவும் பணிவீ ரென்று, ஞானமுணர் வாரருள வவரும் போத நம்பர்திருப் பரங்குன்றை நண்ணி னாரே. (அஅச)

ஆறணிந்தார் தமைவணங்கி யங்குப் போற்றி யணியாப்ப னூரணைந்து பணிந்து பாடி, நீறணிந்த செல்வர்பதி பிறவுஞ் சேர்ந்து நிலவுதிருப் பதிகங்க ணிகழப் பாடிச், சேறணிந்த வயற்பழனக் கழனி சூழ்ந்த சிரபுரத்து வந்தருளுஞ் செல்வர் செங்கண்,ஏறணிந்த வெல்கொடியார் திருப்புத்தூரை யெய்தியிறைஞ்சிச்சிலநா ளிருந்தா ரன்றே. (அஅடு)

**திருஆப்பனூர் - பண் - குறிஞ்சி.**

திருச்சிற்றம்பலம்.

முற்றுஞ்சடைமுடிமேன்முதிராவிளம்பிறையன்
ஒற்றைப்படவரவமதுகொண்டரைக்கணிந்தான்
செற்றமில்சீரானைத்திருவாப்பனூரானைப்
பற்றுமனமுடையார்வினைப்பற்றறுப்பாரே.

அந்தண்புனல்வைகையணியாப்பனூர்மேய
சந்தமலர்க்கொன்றைசடைமேலுடையானை
நந்தியடிபரவுநன்ஞானசம்பந்தன்
சந்தமிவைவல்லார்தடுமாற்றறுப்பாரே.

திருச்சிற்றம்பலம்.

---

**திருப்புத்தூர் - பண் - தக்கராகம்.**

திருச்சிற்றம்பலம்.

வெங்கள்விம்முவெறியார்பொழிற்சோலை, திங்களொடுதிளைக்குந்திருப்புத்தூர்க்
கங்கைதங்குமுடியாரவர்போலும், எங்களுச்சியுறையுமிறையாரே.

நல்லகேள்விஞானசம்பந்தன், செல்வர்சேடருறையுந்திருப்புத்தூர்ச்
சொல்லல்பாடல்வல்லார்தமக்கென்று, மல்லல்தீரும்மவலம்மடையாவே.

திருச்சிற்றம்பலம்.

---

பற்றார்தம் புரங்கண்மலைச் சிலையாற் செற்ற பரமனார் திருப்புத்தூர் பணிந்து போந்து, புற்றாரும் பணிபூண்ட புனிதனார்தம் பூவணத்தைப் புக்கிறைஞ்சிப் புகழ்ந்து பாடிக், கற்றார்க டொழுதேத்துங் கானப் பேருங் கைதொழுது தமிழ்பாடிச் சுழியல் போற்றிக், குற்றாலங் குறும்பலாக் கும்பிட் டேத்திக் கூற்றுதைத்தார் நெல்வேலி குறுகி னாரே. (அஅசு)

புண்ணியனார் நெல்வேலி பணிந்து போற்றிப் புரிசடையார் திருப்பதிகள் பிறவுஞ் சென்று, நண்ணியினி தமர்ந்தங்கு நயந்து பாடி நற்றொண்டருடனாளும் போற்றிச் செல்வார், விண்ணவரைச் செற்றுகந்தா னிலங்கை செற்ற மிக்கபெரும் பாதகத்தை நீக்க வேண்டித், திண்ணியபொற் சிலைத்தடக்கை யிராமன் செய்த திருவிரா மேச்சரத்தைச் சென்று சேர்ந்தார். ()

செங்கண்மால் வழிபட்ட கோயி னண்ணித் திருமுன்பு தாழ்ந்தெழுந்து தென்னனோடு, மங்கையர்க்கு நாயகியார் தாமு மெய்ம்மை மந்திரியா ருஞ்சூழ மணிநீள் வாயிற், பொங்கியெழும் விருப்பினொ டுடனேபுக்குப் புடைவலங்கொண் டுள்ளணைவார் போற்றி செய்து, பங்கயச்செங் கைகுவித்துப் பணிந்து நின்று பாடினார் மன்னவனும் பரவி யேத்த. (அஅஅ)

சேதுவின்கட் செங்கண்மால் பூசை செய்த சிவபெருமான் றனைப் பாடிப் பணிந்து போந்து, காதலுட னங்கரி லினிது மேவிக் கண்ணுதலான் றிருத்தொண்ட ரானார்க் கெல்லாங், கோதில்புகழ்ப் பாண்டிமா தேவி யார்

மெய்க் குலச்சிறையார் குறைவறுத்துப் போற்றிச்செல்ல,நாதர்தமை நாடோறும் வணங்கி யேத்தி நளிர்வேலைக் கரையினயந் திருந்தா ரன்றே. (அஅகூ)

அந்நகரி லமர்ந்தங்க ணினிது மேவி யாழிபுடை சூழ்ந்தொலிக்கு மீழந் தன்னின், மன்னுதிருக் கோணமலை மகிழ்ந்த செங்கண் மழவிடையார் தமைப்போற்றி வணங்கிப் பாடிச், சென்னிமதி புனைமாட மாதோட் டத்திற் றிருக்கேதீச் சரத்தண்ணல் செய்ய பாதம், உன்னிமிகப் பணிந்தேத்தி யன்ப ரோடு மூலவாத கிழிபெற்று ருவகை யுற்றார். (அகூ௦)

---

## திருக்கோணமாமலை - பண் - புறநீர்மை.

திருச்சிற்றம்பலம்.

நிரைகழலரவஞ்சிலம்பொலியலம்புகிமலர்நீறணிதிருமேனி
வரைகெழுமகளோர்பாகமாப்புணர்ந்தவடிவினர்கொடியணிவிடையர்
கரைகெழுசந்துங்காரகிற்பிளவுமளப்பருங்கனமணிவரன்றிக்
குரைகடலோடநித்திலங்கொழிக்குங்கோணமாமலையமர்ந்தாரே.

குற்றமிலாதார்குரைகடல்சூழ்ந்தகோணமாமலையமர்ந்தாரைக்
கற்றுணர்கேள்விக்காழியர்பெருமான்கருத்துடைஞானசம்பந்தன்
உற்றசெந்தமிழார்மாலையீரைந்துமுரைப்பவர்கேட்பவருயர்ந்தோர்
சுற்றமுமாகித்தொல்வினையடையார்தோன்றுவர்வானிடைப்பொலிந்தே.

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்கேதீச்சரம் - பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

விருதுகுன்றமாமேருவினாணரவாவனலெரியம்பாற்
பொருதுமூவெயில்செற்றவன்பற்றிநின்றுறைபதியெந்நாளுங்
கருதுகின்றவூர்கனைகடற்கடிகமழ்பொழிலணிமாதோட்டங்
கருதிநின்றகேதீச்சரங்கைதொழக்கடுவினையடையாவே.

மாடெலாமணமுரசெனக்கடலினதொலிக்கடன்மாதோட்டத்
தாடலேறுடையண்ணல்கேதீச்சரத்தடிகளையணிகாழி
நாடுளார்க்கிறைஞானசம்பந்தன்சொன்னவின்றெழுபாமாலை
பாட்டலாயினபாடுமின்பத்தர்கள்பரகதிபெறலாமே.

திருச்சிற்றம்பலம்.

---

அப்பதியைத் தொழுதுவட திசைமேற் செல்வா ரங்கையனற் றரித்த பிரா னமருங் கோயில், புக்கிறைஞ்சிப் பலபதியுந் தொழுது போற்றிப் புணரிபொரு தலைகரைவா யொழியப் போந்தே,செப்பரிய புகழ்த்திருவா டானை சேர்ந்து செந்தமிழ்மா லைகள்சாத்திச் சிவனார் மன்னும், ஒப்பரிய புனவாயில் போற்றி செய்து வணங்கினு ருலகுய்ய ஞான முண்டார். (அகூக)

---

(அகூ௦) திருக்கோணமலை - இக்காலத்தில் திருக்கணமலை யென வழங்குகிறது; மலையிருக்கின்றது; திருக்கோயிலில்லை. திருக்கேதீச்சரம் - இத்தலம் காடால் மூடப்பட்டிருக்கிறது. (அகூக) புணரிபொருது அலைகரைவாய் - சமுத்திரம் மோதி அலைக்கும் கரையை.

பதிநிலவு பாண்டிநா டதனின் முக்கட் பரமனூர் மகிழ்விடங்கள் பலவும் போற்றி, விதிநிலவு வேதநூ னெறியே யாக்கி வெண்ணீற்றின் சார்வினூன் மிக்கு யர்ந்த, கதியருளிக் காழிநகர் வாழ வந்தார் கண்ணுதலான் திருத்தொண்டர் பலருஞ் சூழ, மதிநிலவு குலவேந்தன் போற்றிச் செல்ல மந்திரியார் பதிமணமேற் குடியில் வந்தார். (அகூஉ)

அந்நகரி லினிதமர்வா ரருகு சூழ்ந்த பதிகளினீ டங்கணர்தங் கோயி ஞழ்ந்து, மன்னுதிருத் தொண்டருடன் மீண்டு சேர்ந்து மன்னவனு மங்கையருக் கரசி யாருங், கொன்னவில்வேற் குலச்சிறையார் தாமுங் கூடிக் குரைகழல்கள் பணிந்துதுறை கொண்டு போற்றச், சென்னிவளர் மதியணிந்தார் பாதம் போற்றிச் சிரபுரத்துச் செல்வரினி திருந்த நாளில். (அகூங)

பொங்குபுனற் காவிரிநா டதனின் மீண்டு போதுதற்குத் திருவுள்ளமாகப் போற்று, மங்கையருக் கரசியார் தாமுந் தென்னர் மன்னவனு மந்திரியார் தாமுங் கூட, அங்கவர்தந் திருப்பாதம் பிரிய லாற்று துடன்போக வொருப்படுமவ் வளவு நோக்கி, இங்குநான் மொழிந்ததனுக் கிசைந்தீ ராகி லீசர்சிவ நெறிபோற்றி யிருப்பீ ரென்று. (அகூச)

சாலமிகத் தளர்வாரைத் தளரா வண்ணந் தருவனமற் றவர்க்கருளிச் செய்த பின்பு, மேலவர்தம் பணிமறுக்க வவரு மஞ்சி மீள்வதனுக் கிசைந்து திருவடியில் வீழ்ந்து, ஞாலமுய்ய வந்தருளும் பிள்ளை யாரைப் பிரியாத நண்பினொடுந் தொழுது நின்றார், ஆலவிட முண்டவரை யடிகள் போற்ற வந்நாட்டை யகன்றுமீண் டணையச் செல்வார். (அகூரு)

பொன்னிவளந் தருநாடு புகுந்து மிக்க பொருவில்சீர்த் திருத்தொண்டர் குழாத்தி னோடும், பன்னகப்பூ ணணிந்தவர்தங் கோயி லூறும் பத்தருடன் பதியுள்ளோர் போற்றச் சென்று,கன்னிமதிற் றிருக்களரும் போற்றிக் கண்டங் கறையணிந்தார் பாதாளீச் சரமும் பாடி, முன்னணைந்த பதிபிறவும் பணிந்து போற்றி முள்ளிவாய்க் கரையணைந்தார் முந்நூன் மார்பர். (அகூசு)

மலைவளர்சந் தனமகிலுந் தேக்கு முந்தி மலர்ப்பிறங்கல் வண்டிரைப்பச் சுமந்து பொங்கி, யலைபெருகி யாளியங்கா வண்ண மாறு பெருகுதலாலத்துறையி லணையு மோட, நிலைபுரியு மோடக்கோ னிலையி லாமை நீர்வாழ்நர் கரையின்க ணிறுத்திப் போகக், கலைபயிலுங் கவுணியர்கோ னதனைக் கண்டக் கரையின்க ணெழுந்தருளி நின்ற காலை. (அகூஎ)

தேவர்பிரா னமர்ந்ததிருக் கொள்ளம் பூது ரெதிர்தோன்றத் திருவுள்ளம் பணியச் சென்று, மேவுதலா லோடங்கள் விடுவா ரின்றி யொழிந்திடவு மிக்கதோர் விரைவாற் சண்பை, காவலனு ரோடத்தின் கட்ட விழ்த்துக் கண்ணுதலான் றிருத்தொண்டர் தம்மை யேற்றி, நாவலமே கோலாக வதன்மே னின்று நம்பர்தமைக் கொட்டமென நவின்று பாட. (அகூஅ)

உம்பருய்ய நஞ்சுண்டா ரருளா லோடஞ் செலச்செல்ல வுந்துதலா லூடு சென்று, செம்பொனேர் சடையார்தங் கொள்ளம் பூதூர் தனைச்சேர வக்கரையிற் சேர்ந்த பின்பு, நம்பரவர் தமைவணங்க ஞான மூண்ட பிள்ளையார் நற்றொண்ட ருடனிழிந்து,வம்பலரு நறுங்கொன்றை நயந்தார் கோயில் வாயிலின்முன் மகிழ்ச்சியொடு வந்து சார்ந்தார். (அகக)

---

திருக்கொள்ளம்பூதூர் - ஈரடிமேல்வைப்பு - பண் - காந்தாரபஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

கொட்டமேகமழுங்கொள்ளம்பூதூர், நட்டமாடியநம்பனையுள்கச்
செல்லவுந்துகசிந்தையார்தொழ, நல்குமாறருணம்பனே.

கொன்றைசேர்சடையான்கொள்ளம்பூதூர்,நன்றுகாழியுண்ஞானசம்பந்தன்
இன்றுசொன்மாலைகொண்டேத்தவல்லார்போ, யென்றும்வானவரோடிருப்பாரே.

திருச்சிற்றம்பலம்.

---

நீணிலைக்கோ புரமதனை யிறைஞ்சிப் புக்கு நிகரிலாத் தொண்டருட னெருங்கச் சென்று, வாணிலவு கோயிலினை வலங்கொண் டெய்தி மதிச்சடையார் திருமுன்பு வணங்கி நின்று, தாணுவே யாற்றின்கண் ணோட முய்க்குந் தன்மையா லருடந்த தலைவா நாகப், பூணினாய் களிற்றுரிவை போர்த்த முக்கட் புனிதனே யெனப்பணிந்து போற்றி செய்தார். (கூ௦௦)

போற்றிசைத்துப் புறம்போந்தங் குறையு நாளிற் பூழியன்முன் புன்சமயத் தமணர் தம்மோ [illegible]டற்றபெரு வாதின்க ணெரியின் வேவாப் பதிக முடையிறையவ[illegible]றைஞ்ச வேண்டி, யாற்றவுமங் கருள்பெற்றுப் போந்து முன்ன மணைந்[illegible]பதி களுமிறைஞ்சி யன்பர் சூழ, நாற்றிசையும் பரவுதிரு நள்ளா றெய்தி நாடுடைநா யகர்கோயி லணணி னாரே. (கூ௦க)

நீடுதிருத் தொண்டர்புடை சூழ வங்க ணித்திலயா னத்திடைநின் றிழிந்து சென்று,பீடுடைய திருவாயில் பணிந்து புக்குப் பிறையணிந்த சென்னியார் மன்னுங் கோயின், மாடுவலங் கொண்டுள்ளான் மகிழ்ந்து புக்கு மலர்க்கரங்கள் குவித்திறைஞ்சி வள்ள லாரைப், பாடகமெல் லடியெடுத்துப் பாடி நின்று பரவினார் கண்ணருவி பரந்து பாய. (கூ௦உ)

---

திருநள்ளாறுந் - திருவாலவாயும் - பண் - நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.

பாடகமெல்லடிப்பாவையோடும்படுபிணக்காடிடம்பற்றிநின்று
நாடகமாடுநள்ளாறுடையநம்பெருமானிதுவென்கொல்சொல்லாய்
சூடகமுன்கைமடந்தைமார்கடுணைவரொடுந்தொழுதேத்திவாழ்த்த
வாடகமாடநெருங்குகூடலாலவாயின்கணமர்ந்தவாறே.

---

(கூ௦க) நாடுடை நாயகர் என்பதை "நாடுடைய நம்பெருமான் மேயது நள்ளாறே" என்னுந் தேவாரத்தா னுணர்க.

அன்புடையானைக்கூடலாலவாய்மேவியதென்கொலென்று
நன்பொனைநாதனைநள்ளாற்றானைநயம்பெறப்போற்றிநலங்குலாவு
பொன்புடைசூழ்தருமாடக்காழிப்பூசுரன்ஞானசம்பந்தன்சொன்ன
இன்புடைப்பாடல்கள்பத்தும்வல்லாரிமையவரேத்தவிருப்பர்தாமே.

திருச்சிற்றம்பலம்.

---

தென்னவர்கோன் முன்னமணர் செய்த வாதிற் றீயின்க ணிடுமேடு பச்சை யாக்கி, என்னுள்ளத் துணையாகி யால வாயி லமர்ந்திருந்த வாறென்கொ லெந்தா யென்று, பன்னுதமிழ்த் தொடைசாத்திப் பரவிப் போந்து பண்பினிய தொண்டருட னங்கு வைகி, மன்னுபுகழ்ப் பதிபிறவும் வணங்கச் சண்பை வள்ளலார் நள்ளாறு வணங்கிச் செல்வார். (கூ0ரு)

சீர்நிலவு திருத்தெளிச்சே ரியினைச் சேர்ந்து சிவபெருமான் றனைப்பரவிச் செல்லும் போது, சார்வறியாச் சாக்கியர்தம் போதி மங்கை சார்தலுமற் றதுவறிந்த சைவ ரெல்லாம், ஆர்கலியின் கிளர்ச்சியெனச் சங்கு தாரை யளவிறந்த பல்லியங்கண் முழக்கி யார்த்துப்,பார்குலவு தனிக்காளஞ் சின்ன மெல்லாம் பரசமய கோளரிவந் தானென் றூத. (கூ0சு)

புல்லறிவிற் சாக்கியர்க ளறிந்தார் கூடிப் புகலியர்தம் புரவலனார் புகுந்து தங்கள், எல்லையினி லெழுந்தருளும் பொழுது தொண்ட ரெடுத்தவார்ப் பொலியாலு மெதிர்முன்சென்று, மல்கியெழுந் திருச்சின்ன வொலிக ளாலு மனங்கொண்ட பொறாமையினான் மருண்டு தங்கள்,கல்வியினின் மேம்பட்ட புத்த நந்தி முதலான தேரர்க்குங் கனன்று சொன்னார். (கூ0எ)

மற்றவர்கள் வெவ்வுரையும் பிள்ளை யார்முன் வருசின்னப் பெருங்கொலியு மன்னுந் தொண்டர், பொற்புடைய வார்ப்பொலியுஞ் செவியி னூடு புடைத்தநா ராசமெனப் புக்க போது, செற்றமிகு முள்ளத்துப் புத்த நந்தி செயிர்த்தெழுந்து தேரர்குழாஞ் சூழச் சென்று, வெற்றிபுனை சின்னங்கள் வாதிலெம்மை வென்றன்றோ பிடிப்பதென வெகுண்டு சொன்னான்.(கூ0அ)

புத்தரினம் புடைசூழப் புத்த நந்தி பொருவில்ஞா னப்புனிதர் திருமுன் பூது, மெய்த்தவிறற் சின்னங்கள் விலக்குங் காலை வெகுண்டெழுந்த திருத்தொண்டர் வெறுத்து நோக்கி,இத்தகைய செயற்கிவரைத் தடிதல்செய்யா திதுபொறுக்கிற் றங்கணிலை யேறப ரென்று, முத்துநிரைச் சிவிகையின்மேன் மணியைவந்து முறைபணிந்து புகுந்தபடி மொழிந்து நின்றார்.()

வருமிடத்தி லழகிதா நமக்கு வாதின் மாற்றிவர்தம் பொருணிலைமை மருத வண்ணம்,பொருமிடத்தி லறிகின்றோம் புத்த நந்தி பொய்ம்மேற்கோ ளெனப்புகலி வேந்தர் கூற, வருமறைச்சொற் றிருப்பதிக மெழுது மன்பர்

---

(கூ௧அ) மருதவண்ணம் - மறுக்கப்படாதிருத்தலை. பொருமிடத்து - வாதமுகத்தில். திருப்பதிக மெழுதுமன்பர் - சம்பந்தசரணாலயர். இவர் ஆளுடைய பிள்ளையாரது நல்லம்மான்.

ஆளுடைய பிள்ளையார் திருவாக் காலே, யுருமிடித்து விழப்புத்த னுத்த மாங்க முருண்டுவீழ் கெனப்பொரு வுரைமுன் விட்டார். (கூoஅ)

ஏறுயர்த்தார் சைவநெறி யாணை யுய்க்க வெதிர்விலக்கு மிடையூற்றை யெறிந்து நீக்கு, மாறில்வலி மந்திரமா மசனி போல வாய்மையுரைத் திருத் தொண்டர் வாக்கி னாலே,வேறுமொழிப் போரேற்பான் வந்த புத்தன் மேனி யையுந் தலையினையும் வெவ்வே றாகக், கூறுபட நூறியிடப் புத்தர் கூட்டங் குலைந்தோடி விழுந்துவெருக் கொண்ட தன்றே. (கூ0கூ)

மற்றவர்க ணிலைமையையும் புத்த நந்தி வாக்கின்போ ரேற்றவன்றன் றலையு மெய்யும், அற்றுவிழ அத்திரவாக் கதனா லன்ப ரறுத்ததுவுங் கண்ட வ ரனடியா ரெல்லாம், வெற்றிதரும் பிள்ளையார் தமக்குச் சென்று விண் ணப்பஞ் செயவெதிர்ந்த விலக்கு நீங்க, உற்றவிதி யதுவேயா மாவென் றெல்லா மோதுகென வவ்வொலிவா னுற்ற தன்றே. (கூக0)

---

திருச்சிற்றம்பலம்.

புத்தர்சமண்கழுக்கையர்பொய்கொளாச், சித்தத்தவர்கடெளிந்துதேறின
வித்தகநீறணிவார்வினைப்பகைக்கு, அத்திரமாவனவஞ்செழுத்துமே.

திருச்சிற்றம்பலம்.

---

அஞ்சியகன் றோடியவப் புத்த ரெல்லா மதிசயித்து மீண்டுமுட னணை ந்து கூடி, வஞ்சனையோ விதுதான்மற் றவர்தஞ் சைவ வாய்மையோ வென மருண்டு மனத்திற் கொள்வார், எஞ்சலின்மந் திரவாத மன்றி யெம்மோ டெதிர்ந்து பொருள் பேசுவதற் கிசைவ தென்று, தஞ்செயலின் மிக்குள்ள சாரி புத்தன் றன்னையே முன்கொண்டு பின்னுஞ் சார்ந்தார். (கூகக)

அத்தன்மை கேட்டருளிச் சண்பைவந்த வடிவேலேறு திருவுள்ளத் தழுகி தென்று, மெத்தமகிழ்ச் சியினோடும் விரைந்து சென்று வெண்டரளச் சிவி கையினின் றிழிந்து வேறோர், சத்திரமண் டபத்தின்மிசை யேறி நீடு சைவ ருட னெழுந்தருளி யிருந்து சாரும், புத்தர்களை யழைக்கவெனத் திருமுன் னின்றார் புகலிகா வலரேவல் போற்றிச் சென்றார். (கூகஉ)

சென்றவர்க டேரர்குழா மணிந்து நீங்கள் செப்பிவரும் பொருணிலை மை தெரிக்க வெங்கள், வென்றிமழ விளங்களிறு சண்பை யாளி வேதபா ரகன்மும்மைத் தமிழின் வேந்த, னன்றுமகிழ்ந் தழைக்கின்றா னீண்ட நீரு நண்ணுமெனக் கூறுதலு நன்மை சாராத், தன்றகைமைப் புத்தருடன் சாரி புத்தன் சத்திரமண் டபமுன்பு சார வந்தான். (கூகங)

---

(கூoஅ) உத்தமாங்கம் - தலை. பாடியபாசுரம் - "புத்தர்சமணகழுக்கையர்" என்பது. (கூoகூ) அசனி - இடி. (கூக0) அத்திரவாக்கு அதனால் - "அத்திரமாவன அஞ்செழுத்துமே" என்னுந் திருவாக்கால்.

அங்கணைந்து மண்டபத்துப் புத்த ரோடும் பிள்ளையா ரருகணைய நின்ற போதில், எங்குநிகழ் திருச்சின்னந் தடுத்த புத்த னிருஞ்சிரத்தைப் பொடியாக்கு மெதிரி லன்பர், பொங்குபுகழ்ப் புகலிகா வலர்தம் பாதம் போற்றியரு ளாற்சாரி புத்தன் றன்னை,யுங்கடலை வனும்பொருளு முரைக்க வென்ன வுற்றவா தினைமேற்கொண் டுரைசெய் கின்றான். (௬௧௪)

கற்பங்க ளனைத்தினினும் பிறந்து வீந்து கதிமாறுங் கணபங்க வியல்பு தன்னிற், பொற்புடைய தானமே தவமே நன்மை புரிந்தநிலை யோகமே பொருந்தச் செய்ய, உற்பவிக்கு மொழிவின்றி யுரைத்த ஞானத் தொழியாத பேரின்ப முத்தி பெற்றான், பற்பலரும் பிழைத்துய்ய வறமுன் சொன்ன பான்மையான் யாங்கடொழும் பரம னென்றான். (௬௧௫)

என்றுரைத்த சாரிபுத்த னெதிர்வந் தேற்ற விருந்தவத்துப் பெருந்தன்மை யன்பர் தாமு, நன்றுமது தலைவன்றான் பெற்றா னென்று நாட்டுகின்ற முத்திதான் யாவ தென்றார், நின்றவுரு வேதனையே குறிப்புச் செய்கை நேர்நின்ற ஞானமென நிகழ்ந்த வைந்தும், ஒன்றியகந் தத்தவிவே முத்தி யென்ன வுரைசெய்தான் பிடகத்தி னுணர்வு மிக்கான். (௬௧௬)

---

(௬௧௫) பிறந்து வீந்து கதிமாறும் கணபங்க இயல்பு தன்னில் - (உயிர்கள் உய்தற்பொருட்டுப்) பிறந்து இறந்து அக்கதியினின்றும் மாறிப்பேரின்ப நிர்வாணத்தையடையுங் கணபங்க இயலைக்கூறும் பௌத்தசமயத்தில். கணம்-நூறுதாமரை இதழ்களையடுக்கி ஊசியினால் குத்தினால் எட்டு இதழ்கள் அறும் எல்லை. .(௬௧௬) உரு - மூர்த்தகந்தங்களாகிய ரூபகந்தம; அது பிருதிவி, அப்பு, தேயு, வாயு என்னும் பூதவுருநான்கும், கடினம், கந்தம், இரதம், ரூபம் என்னும் உபாதான வுருநான்கும் ஆக எட்டுவகைப்படும். வேதனை - வேதனாகந்தம்; அதுகுசலாவேதனை, ( - சுகஅறிவு,) அகுசலாவேதனை,( - துக்க அறிவு,) குசலாகுசலவேதனை ( - சுகதுக்க அறிவு) என மூவகைப்படும்.குறிப்பு - குறிப்புக்கந்தம்; அது சோத்திரம், துவக்கு, சக்ஷு, சிங்குவை, ஆக்கிராணம்என்னும் ஞானேந்திரியமைந்தும், சித்தமொன்றும் ஆக அறுவகைப்படும். செய்கை-பாவனாகந்தம்; அது வாக்கின் தீக்குணங்களாய பொய்சொல்லல், கோட்சொல்லல், கோபித்துச்சொல்லல், பயனில்சொல் - காயத்தீக் குணங்களாய களவாடல்போதல், வறிதே தொழில்செயல், கொலைசெயல் - மனத்தீக் குணங்களாய கொலைநினைக்கை, காமப்பற்று, ஆசை என்னுந் தீக்குணங்கள் பத்தும், வாக்கின் நற்குணங்களாய மெய்யுரை, நல்வார்த்தை, இனியனகூறல், பயன்படுசொல் - காய நற்குணங்களாய பள்ளிவலம்வரல், தவம்புரிதல், தானஞ்செய்தல்-மன நற்குணங்களாய அருள்நினைவு, ஆசையறுத்தல், தவப்பற்று என்னும் நற்குணங்கள் பத்தும் ஆக இருபதுவகைப்படும். நேர்நின்ற ஞானம் - விஞ்ஞானம்; அது சத்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தம், மனம் என அறுவகைப்படும். இவைகளின் விரிவை மணிமேகலை முதலிய புத்தநூற்களிற் காண்க. பிடகம் - இருபத்துநான்கு பௌத்தர்கள் மரபில் உபதேசக்கிரமத்தாற் செய்யப்பட்ட நூல். அது வினயபிடகம், சூத்திரபிடகம், அவிதன்மபிடகம் என மூவகைப்படும்.

